சொர்க்கபதமாகியிந்தவெளி வெளியைக்கண்டார்-தூண்டிவி
ட்டகுருத்தனையே குட்சஞ்செய்து- சொர்க்கபதந்தனைப்பாருவா
கியோகம்- குட்டப்பாகுளிகைபோலகிரிகொண்டு- சொர்க்கபதந்
தெரிசனையாமாடுங்கூத்து- தொடுகுறியாய்நடனமிட்டேன் கூத்து
ங்காணும் - சொர்க்கபதங்குருவுனக்குவருளிச்செய்தால் - துரியம்
போய்காயமெல்லாஞ்சொர்ணமாமே (௱௪௧)

சொர்ணமேதேடுதற்கு வாதமூர்த்தி தொடுகுறியுப்பாம்வழலை
குட்சங்கண்டார்-சொர்ணமேகொடுக்குமடாசதாசிவத்தின்வைப்பு-
தொட்டேறக்கற்பூரஞ்செயநீராகிற்- சொர்ணமடாநிறமதிற்குதம்நீ
ருந்-துரிசிவெள்ளைபாஷாணமுப்பு சுன்னத்தாட்டு, சொர்ணமாகுஞ் சுன்
னத்திற்றனுப்பார்க்குடன் - சுரோணிதயாம் பூநீறதுசீநீரோ (௱௪௨)

உடைசிநீருப்பொடேமுப்பூவாச்சு - வயிராகுக்கற்பூரமுண்டா
ல்வாதி, வாசியோகத்தின்மேலையமூர்தங் கொள்போல் - வழலையும்
தேவாங்க வன்னத்தன்னை, யாசியாமன்னவேதி யுப்பாய்வண்ண - ம
மூர்தமாயிதையுண்ணவழலையமூர்தந், தேசியாங்குருவல்லபெருமுகும்
பட்டார் - சித்திபெற்ற வழலையுப்புச் சுன்னமாமே (௱௪௩)

ஆமப்பாவீரமிடு வழலைவீரம்- அண்டரண்டங் கடந்தாடும்வா
தஞானி, காமப்பால்பச்சையொடு பவளஞ்சேர்ந்தால்- கண்விழித்
துமூடுமுன்னே நவலோகம்பொன்னாந், தாமப்பாரசதங்கபற்பமா
குஞ் -சாதித்துக்கடுகளவாய்க் கொண்டுதேற, வோமப்பாதேகமெ
ல்லாந் தங்கமாகு - [redacted]மப்பா
சுழிவையில் நந்தியொப்பாம் - நங்குருவாம் நாலாம் பொன்னுகுங்
காணே (௱௪௪)

காணவேசன்முகமாந் தேவரெல்லாங் - கைமுறையாய் ரே
மரிஷி சட்டைநாதர், பூணவேதவமுயல் குட்சஞ்சொன்னார் - புக
ழாகமனமுனைக்க வட்செயத்தைச்சொன்னார், தோணவேசகலசித்
தி கைக்குள்ளாகுந் - தொட்டேறத்திருமூல நாயன்தானே, பேண
வேஅஞ்னூற்றில் ஞானஞ்சொன்னார் - பிழைப்பதற்குக் கைமுறை
க்கென்னூல்பாரோ (௱௪௫)

[பஞ்சமலம்]

பாரப்பாபஞ்சமலஞ் சொல்லக்கேளு - பரிவானபிறிதிவியும
ப்புந்தேயும், நேரப்பாவாயுவுட னுகாசமஞ்சு - நிறுத்துகின்றபொ
றிகேளு நாசிவாய்கண், சாரப்பாமெய்யோடு காற்றையமியலாச்சு-
தன்றூலப்புலன்கேளு சத்தமொடுபரிசஞ், சேரப்பாரூபரசகுட்சு
ந்தேகந் - தெளிவான கெந்தமொடு மஞ்சம்பாரோ (௱௪௬)

(பூதப்பெயர்)

ஆச்சப்பா பூதத்தின் பேரைக்கேளு - அப்பனைபிரமனென்றுமோ ருத்திரன், வாச்சப்பா மயேஸ்பரனுஞ் சதாசிவனுங்கூடி - மகத்தானசிவபஞ்ச பூதமாச்சு, நீச்சப்பா விவர்களுட கமலங்கேளு - நிறையானமுதல் சபையினிதழ்தானாறு, மூச்சப்பா ரண்டான சபையித்கேளு - முக்கியமுள்ள பத்திதுமானஸத்திற்கேளே (௫௪௭)

மூன்றான சபைதனிலே யிதழ்பனிரண்டு - மூர்க்கதாலாஞ் சபையி லீரெட்டாகு, நீண்டான சபைஅஞ்சி லிதழ்தானிரண்டு - நிஷ்டையாஞ் சடத்தினிதழ் தானேசொன்னே, ஊன்றியசக்கரத்தினியல்புகேளு - வுத்தமனே முதற்றானங் கோணம்நாலுந், தாங்கியேரெண்டாந் தானத்தைக்கேளு- நாகரிகமானபிறை கோணந்தானே

தானான மூன்றாந் தானங்கேளு - தடையில்லா முக்கோணந் தன்னைப்பாரு, தேனான நாலாந் தானத்தைக்கேளு - சிறப்பான வறுகோணஞ் சென்றுகாணுங், கோனான வஞ்சாந் தானத்தைக்கேளு-குளிர்ந்தமதியிறைகோண மிதினோடஞ்சு, வானான வந்தந்தசக்கரத்தைச்சொன்னேன் - வாறுமட்சரம் நமசிவாயமென்னே (௫௪௯)

என்னவேபுரியஷ்டம் பஞ்சபூத - மிதினோடே நாதவிந்து சத்தியொன்று, நன்னவேபுரியஷ்ட மெட்டுமாச்சு - நலமானபூரணத்தின் மார்க்கங்கேளு, பன்னவேயொளிப்பாழும்வெளியின்பாழும் - பாங்கானவெளிப்பான நிற்குணத்தின்பாழு, முன்னவே சிவகளையதிறலாட்ட - முற்பனங்கே ளவத்தையஞ்சு மூணிப்பாரே (௫௫௰)

உண்ணவேலாடமதிற் சாக்கிரந்தானென்று - வுத்தமனேகண்டத்தில் சொற்பனந்தானென்று, பூணவேமார்பின்கீழ் சுழுத்தியொன்று - புதல்வனேயுந்தியிலே துரியமொன்று, வீணாத்தண்டினிலே துரியாதீதம் - விளங்கவே சுவாதிஷ்டானத்திற்பாரு, காணுதமணிபூரகத்தின் மேலாங் - காத்தசங்காரம நாகதத்தின்மேலே (௫௫௧)

மேலானவிசுத்திவளி மார்க்கம்விண்ணு - மாக்கினையும்புருவமய்யமாகுமப்பா, கானான தவ்விடத்தே சுழினையாகும் - கண்ணுடியொளிகண்டால் மோக்ஷமாச்சு, மேலானகுருபதத்தைத் தொண்டுபண்ணு - திட்சைவைக்கும் வேளைவந்தால் மவுனஞ்சொல்வார், மாலானமாயையறு மாலைவிட்டு - மாண்டாலுங்குருவிடத்திற் சொர்க்கங்காணே (௫௫௨)

சொர்க்கபதங் காண்பதற்கு வழியேசொல்லுஞ் - சுழினையென்றமூக்குநுனிபிரகாசிக்கும், தர்க்கமதிற் செய்யாதே கண்டுங்காதே - சலியாதேமெலியாதே சாயாதே, கர்க்கவென்றகக்கிஷங்க

ளஷ்டகர்மம் - கடினமென்றுபோகாதே சாகாதேகேள், வர்க்கமெ
ன்றதுலவர்க்கம் நானென்றதே - மனப்புத்தி ஆங்காரமானதே()

ஓதப்பாமவுனத்தால் வாசிகொண்டு - வுண்மையுள்ள வுபாச மொழிந்துபோச்சு, வோதப்பாகவலையெல்லா மெங்கேபோச்சு-விகடம்விட்டு பரத்திலேசெல்லலாச்சு, சூதப்பா மிகப்படைத்த சிந்தையோர்க்கு - சொல்லாதே சூட்சத்தைச் சொன்னால் தோஷம், போதப்பாக்ஷிணத்திலே ரவியிருட்டம்-பூட்டியே தெரிசிக்கப்போதிப்பாயே (௫௪)

போதிப்பாய்முக்குணமும் பூண்டுபார்த்து - புத்தியுள்ளமனம்பார்த்து பொருளைக்காட்டி, சாதிக்கவகைசொல்லும் வாசியோகஞ் - சாதித்தால்தசதீட்சை சாரச்சொல்லும், வாதிக்கமென்ப தெல்லாம் லலாடமீதே - யங்கென்றவழிவங்கே நந்தியாகு, மேலுக்கு இத்தனையுங்கற்கப்போமே - யென்றிருந்தா லொன்றுமில்லை யிளப்பந்தானே. (௫௫)

இளப்பமென்றதொக்கென்பார் தூய்மையென்பா - ரிதுவல்லோசடவமென்பார் சவந்தானென்பார், வளப்பமென்றதூலத்தை மாயச்செய்து- வழியோடேவொளிகண்ட சூட்சமாகா, ரளப்பமென்றரேக்ஷித்தலைத்தள்ளமாட்டார்- ஆதியந்தத்தனையுரைத்து நிலைக்கமாட்டார், குளப்பமென்றதிரேகதாயிமாயைபூண்டு - கூறுகெட்டார்ஞானத்தின் குறியற்றோரே. (௫௬)

குறியற்றபசுவினிட கோலங்கேளு- கோடானகோடிசென்மமெடுத்தேயாடும், குறியற்றகுண்டலியிற்கினைசனுத்மாக்- கொடும்பஞ்சமாபூததேவதைக்கீழாய், குறியற்றவபானவாயுவிக்கறின்றால் - ருத்திரமாய்க்குடியிருந்தான் மாலையுமுடி, குறியற்ற குணத்தாலே யாசாபாசங்- கொண்டாட்டமனந்தவகைக்கோடியாமே. (௫௭)

கோடியென்றனைத்தமதிலிலக்கமில்லை- கொடியபஞ்சபாதகந்தான்விளைந்தபாதி, மாடியதோர்கூத்தெல்லாஞ்சொலக்கேளு-வப்பனேதேவரோமேற்காதாமும், நாடியதோர்மானிடமாய் மிருகமாகி- நதியில்வளருர்வனமாய்ப் பறவையாகி, வாடியதோருர்வனமாய்மரங்களாகி- மலைகல்லாய்மணிபூண்டாய்வகுத்தவாறே (௫௮)

வருத்திட்டநவலோக ரத்தினங்கள் - வாடையுற்ற பரிமளங்கள்மலர்சுகந்தந், தொடுத்திட்டவிதுகளிலே மனத்தின்பாசந் - தொடர்ந்தேதிச்செல்லுமதி லாசைபூண்டு, பகுத்திட்டயோனியொடுதீனியாலும் - பசியிறந்துபோவதெல்லாம் பிறப்பேதய்யா, மகத்துவந்தானிவ்வாசை பதியின்மூன்றுல் - மவுனமென்றஓங்கார வட்டங்காட்டே. (௬௫௯)

வட்டத்திற்குட்சாதி குட்சங்காட்டு - மகாரமென்பார் அகார உகாரத்தையுள்ளே, யெட்டிரண்டேழ்பார்தமிழிலக்கம்பத்தி - யிதுவல்லோபர வெளிக்குள்ளேறுமார்க்க, மஷ்டகர்மங் குளிகைகொண்டு சித்திபாக்கி- பதினாலேபதியறிந்து அறுவுமாகுந், திட்டமுடன்பரத்திலே மனதுமீளுந் - தெளிவாகுலதிவேறுஞ் செப்பினேனே. (௬௬௰)

செப்பினார்கும்பமுனிதீட்சைபாரு-தெளிவாகுமச்சமுனிஞானம்பாரு, ஒப்பானசட்டமுனிதீட்சைபாரு- ஓங்காகோரநந்தியுடதீட்சைபாரு, நப்பிறேனுஸ்வருடஞானம்பார்த்தால்- நகலாதுவறிவங்கேபரத்தில்மீளுந், தப்பதிலேயேதுமில்லை சடாதாரத்தின்- சக்கரத்தின்மவுனசத்தி பூசைகேளே. (௬௬௧)

கேளப்பாவறுகோண முன்முக்கோண - கெடியானதாலயித்ற்குட்சங்கேளு, நாளப்பாமேற்கோணத்துள்ளேகேளு- நல்லதொருபிறைகோணம் யகாரபீடம், வேளப்பாவிட்டகலை மேற்கோணத்தன்னில் - விந்திட்டுவிதினுள்ளே முக்கோணந்தான், வாளப்பாஓங்காரங்கமணைசல்பீசம், வாய்ப்பானதிடக்கலைக்கீழ்க் கோணம்பாரே

பாரப்பாவிதனுள்ளே நாற்கோணந்தான்- பண்பாகச்சிஷ்டிக் கும்பிரமபீடஞ், சேரப்பாநகாரத்தின்மேலாய்றின்றுல்- திடமாகக் கீழ்கோணஞ்செப்பக்கேளு,நேரப்பாவிதனுள்ளேமதிகோணத்து- திசமாகலக்ஷிமிக்குமாலின்பீடங், காரமாமகார[illegible] மேலேதின்றுல்- கருத்தறவேயின்கலைக்கீழ் கோணந்தானே (௬௬௨)

தானென்றகோணத்து விந்துக்குள்ளாய் - சாத்தடாதிரிகோணத்துள்ளேயேளு, வானென்றசங்கார ருத்திரபீடம் - வளமாகுஞ்

ஸிகாரமிதின் மேலேநின்றால், கோணென்ற பின்கலைமேற் கோணத் துள்ளே - குறிப்பாகவிந்திட்டு நாதுக்குள்கேளு, தேனென்ற வறு கோணம் சரவணபவாவென்று - தேறிநுக்குள்விந்திட்டு ருத்திரஞ் சாத்தே (௯௪)

சாத்தடாசாயுச்சியஞ்ருத்திரனுக்காகுந் - தருவானவேதாந்த ஞானமாகுந், தேத்தடாருத்திரனே தேகந்தன்னை - சித்தமயேஸ்ப ரபூசைசிறக்கும்வேத, மாற்றடாகருவியெல்லாம் வகாரமன்றி - மற் றொன்றுமில்லைபடாமனத்திற்காணு, வாத்தடாவறுகோணத்துள்ளே கேளு - வப்பனேகுண்டலியாம் வித்துள்ளாச்சே (௯௫)

ஆச்சப்பாவிதுக்குள்ளே மூக்கோணந்தா - னச்சரியம் றீங்கா ரமகாரமிட, மூச்சப்பாமவுனமென்ற சத்திவாலை - மோகனகேளு சத்தியிருந்தாள்பாரு, நீச்சப்பாயிவள்தன்னையே பூசைபண்ணு- நிலை யானசடாதாரதீட்சையாலே,வாச்சப்பாயோச்சுதனைக்கிலம்பசித்தி- மாயையெல்லாந்தவறுண்டு மவுனமாச்சே (௯௬)

ஆச்சப்பாசூரியன்போல்வட்டமிட்டு- வதின்மேலேயிதழெட் டிலக்ஷிடசத்திபீசந், நாமப்பாயிதின்மேல்சதுரரேகை-தப்பாமல் மூன்றுவரையொண்டாம்வீதி, வாமப்பாயவனவீதிக்குள்ளேகேளு- மகத்தானயக்ஷிடபெலி அக்ஷிடநாகம், ஓமப்பாவயிரவர்கள் கிரியப் பால்-உத்தமனேயிவர்களுடபீசம்போட்டே (௯௭)

போட்டப்பாமறுவீதிக்குள்ளேகேளு - புகழானதேவரொடுரி ஷிகள்பீசந், தேடப்பாநால்வாசல்தோறுங்கேளு- திரமானதுவார பாலாள்வீசந்தா, நாடப்பாசந்நிதியிற்கொடிக்கம்பப்பீசம் - நாட் டடாநந்திபடபீசந்தானுஞ், சூடப்பாகேளுசத்தி திட்சையாலே- சுகமானவபானத்தில்தோன்றிடாயே (௯௮)

தோன்றிடுவாய்மவுனத்தில்மானதமாம்பூசை- சுகமாகவபிஷே கமெல்லாஞ்செய்து, வூன்றவஸ்திரஆபரணஞ்சாத்தி - வுத்தமனே சுகந்தபரிமளங்கள்சாற்றி, யென்றதொருதூபமொடுதீபங்காட்டி- யின்பமுறநெய்வேத்தியஞ்செய்தபின்பு, கான்றமனமொருமித்த பேர்க்குஞானக் - காட்[illegible]யே அம்மாவென்னே (௯௯)

அம்மனேமாதாவேதாயேதேவி - அண்டமேபிண்டமேயா தியான, அம்மனேயந்தரியே அருள்மெய்ஞ்ஞான- வற்புதமேநிற் குணமேயளவில்லாத, அம்மனேயுமையவளே பார்வதியேகௌரி- ஆரணங்கேபூரணியேஞானமீறும், அம்மனேதிரோதாயிநீலிசூலி- அகளங்கமாயிநிந்திரசாலித்தாயே (௱)

தாயேபராபரையேசர்வசத்தி - சங்கரியேசுந்தரியேதாண்ட
வஞ்செய், மாயேகிர்பாகரியேமானேதேனே- மானனையேபேதை
யேபேதும்பைப்பெண்ணே,ஆயியேமங்கையேமடந்தையென்று
மரிவையேதெரிவையேபேரிளம்பெண்ணை, காரியேநற்கனியாங்
கண்ணேயின்னே - காரிகையேமாலினியேகமலைவாழ்வே (௯௭௧)

கமலியேவாணியேகபாலியான - கற்பகமேநற்பதமேகருத்
துள்ளாரும், விமலியேகாரணயேவேதத்தாயே - விளக்கொளியே
ரவியொளியேகாந்தியீறும்,அமலையேமதியொளியேமுப்பாழானே
வப்புறத்தேநின்றதொரு சுடரோசோதி; நிமலையேநிட்களமே வடி
வொப்பில்லா - நேமியேகாமியேநெறியேயென்னே. (௯௭௨)

நெறியானவைம்பொறியேபுலனஞ்சான - நெஞ்சியேவஞ்சி
யேநிஷ்டைகூருங், குறியானசுழினையேயின்கலையேயிங்பக்-கொழு
ந்தானவிடகலையேகுண்டலியேதேறும், வெறியானலஙிரியேவமுர்
தம்நின்ற-விண்ணொளியேகண்ணொளியேவிசையேபூவே, அறிவான
தூலமேசூட்சமமல - மண்டபகிரண்டமேயாத்தாளெம்மனே (௯௭௩)

ஆத்தாளேஅம்பிகையேயானந்தாயி - அஷ்டசத்திவஷ்டதுர்
க்கியஷ்டபாலி, பூத்தாளேபோதகமேநின்றவேதப்- பொக்கிஷமே
கக்கிஷமேயப்பொருளேயாவி, காத்தாளேமெய்ப்புடலைக்கருவே
நந்தி- காமியேவாமியேயோமரூபி, யேத்தாளேசற்பணியே தேவ
தேவி - யிந்திராணியேயுமையேயிருளேயெண்ணே (௯௭௪)

இருளானமாயையுற்றமனிதவாழ்வே-யேகமேசச்சிதானந்தித்
தாயே, யுருளானசகடபேயூர்வனவேதேறே - யுத்தமனேநந்திவா
மூழூர்வனவேதானிவ், மருளானமிருகமேதாபரமேயென்று - வா
னவேபறப்பனவேமருவேசொற்சத்தி, திருவானபஞ்சசத்திபஞ்
சபூத - தெய்வமேசிவசிவனேசிவமேயென்னே (௯௭௫)

சிவமானசிவகலையடங்குங்கூடே - தேகமெனுஞ்சுத்திவாரச்சட
மேகாயம், பவமானபாதகமேபண்ணியஞான- பக்குவமேலலாட
மேபிரமவாழ்வே, தவமானபேரின்பமுத்தியால - சத்தியேமுத்தி
யேகருவேசிவன், தவமானதொக்குடம்பேசுக்குலமேஞான- சத்து
ருவேயித்துருவேதரமியென்னே (௯௭௬)

தர்மியோ ஈஷிமனமே நவசித்தபதி - தன்மனமேயொன்றாகி
த்தழைத்தாயம்மா, வெர்மியேசராசரமே மேலெகீழை - விளங்கு
நூலானவிளைசாத்திரங்கள்பொங்கி, கர்மியேகாமகளைகூடேவீடே
காந்தியேதிப்புனைபேனைலேபாணி, வர்மியேபூமியேவளியேசத்த
மாவிடமேசங்கமெல்லாமனமாயில்லை (௱எஎ)

இல்லென்றுமாடமென்றுமிரவியென்று - பிறப்பதற்கும்பிறப்
பதற்குமுயிராய்பொன்றிங், கல்லென்றுப்வாளென்றங் கடலென்று
நீதால் - கனிந்தசுவையாறுவகை ரசமுமாகி, சொல்லென்றும் நா
வென்றுந்தோத்திரமேயென்றுந் - துரியாதீதத்தின்வளசாக்கிறமே
ன்று, வெல்லென்றுங் கொல்லென்றும் வறியாமென்றும் - வெட்ட
வெளியாயிருந்தவேருமென்னை (௱எஅ)

வேருகிமண்டலந்தான்மூன்றுமாகி - வேராகித்தூராகிவித்து
மாகி,மாருகிக்கொம்பாகித்தளிருமாகி- மலராகிப்பிஞ்சாகிகாய்ப்ப
ழமுமாகி, நீருகிநீறுமுன்பேசுக்காருகி - நிஃதிடையுமாய்நித்தியமா
யோகமாகிப், பேருகிப்பேறன்றிஷித்துமாகி - பித்தாகிப்பிறப்பு
மாய்ப்பிணியுமாமே (௱எகூ)

பிணியுமாய்வறுமையுமாய்க் கலியுமாகி - பேதலிப்பாய்மன
மாகிப்புத்தியாகி, மணியுமாயோசையுமாயுன்ளுக்காகி - வழலையா
ய்வாதமாய்வாயுவாகி, தணியுமாயுயர்ச்சியுமாய்த் தத்துவங்களாகி-
தானென்றுந்தலையென்றுமறிவதாகி, பணுவுமாய்மேருவுமாயணுவு
ளணுவாகி - யந்தரமாய்ச்சொர்க்கமாய்நரகமாயே (௱அ௰)

நரகமாய்க்கிருமியாயிரதமாகி - நவலோகம்பொன்றெடுவெ
ள்ளியாகி, தவமானநவரத்தின மணிகளாகி - சாலோகசாமீபசாரூ
பமாகி, நிரமானசாயுச்யபதமுமாகி- செடியாகிப்பூடாகிச்சேறுமா
கி, பரமாகிச்சிவனுமாய்நாரியாகிப் - பற்றமாய்ச்சிற்றமாய்ப்பக
லுமாயே (௱அக)

பகலாகிராவாகிமதியுமாகி - பல்லாயிரங்கோடியண்டமாகிச்
சுகமாகித்துக்கமுமாயாவுமாகித்- துடக்காகிதுடக்கற்றசோதியாகி,

யேகமாகிப்பரமோட்சசத்தியுமாகி - யின்பமதாய்த்துன்பமுமாயெ ல்லாமகிச், சகமாகிக்கொடுப்பதற்குவஷ்புமாகி - தாயாகிமகவாகித் தந்தையாயே (௩௮௨)

தந்தையாயாணாகிப்பெண்ணுமாகி - தாரகத்தினவியாகிப்பெ லியுமாகி, விந்தையாய்ப்பெருமையாய்ச் சிறுமையாகி - மேதினி யெல்லாம்நீயாய்நானுமாகி, சிந்தையாயுமனதாயென்மனமுமா கித் - தெளிவாகித்தெளிவில்லாச்சென்மமாகி, யெந்தையாய்சத்தா கிசித்துமாகி - யேகமாமாநந்தியென்றுபோற்றே (௩௮௩)

போற்றுவதுந்தானாகிப்பொருளுந்தானாய் - புரியஷ்டபூரண மாயெட்டுநாலா, யேத்துவதுமனத்துள்ளாய்கண்வாய்மூக்கா - யி ருசெவியாய்த்தூலமொடு சூட்சமாகி, மாற்றுவதுசூட்சாதி சூக்கு ட்சம் - மவுனமாய்க்கெவுனமாய்வளர்பிறையாய்த்தேய்ந்தே,மாற் றுவித்திற்பாசம்வைத்துஞ்ஞானம்வைத்து - மாணுவதுந்தாணுவது ந்தாய்நீயென்னே (௩௮௪)

நீயாணுயண்டமுதற்பதமெண்பதுந்தா - னிலைத்துநின்றுயுயி ர்க்குயிராயெங்குந்தானே, நீயாறுநவக்கிரகம்வாரமேழும் - நேச மாயிராசியொடுபன்னிரண்டும், நீயாறுநட்சத்திரமிருபத்தேழும்- நேசமாய்ப்பட்சமொடுகரணயோக, நீயாணுய்நால்வேதமாறுசாத் திரம்-நிலையானபதினெண்புராணமென்னே (௩௮௫)

என்றுலகம்பிறக்கவென்னெண்கலைக்கியானந்த- மிப்படியே யுற்பன்னபாஷைகளோர்கோடி, என்றுசொல்லக்கோடியென்றுல க்கோவில்லை - யெடுத்தெடுத்தசாஸ்திரமோ லக்கோவில்லை, யென் றுநான்பார்ப்பதற்குக்காலமில்லை- யிமையோட்டிவிழிக்குமுன்னே படைத்தழித்தாயம்மா, யென்றுனையேதோத்தரிக்க மந்திரந்தான்- லக்கமில்லைக்கணக்கண்டோரில்லைதானே (௩௮௬)

தானென்றமந்திரங்களெல்லாம்நீதான்- சரிதைநீகிரிகைநீயோ கம்நீயே, தானென்றஞானம்நீஞானத்தமென்னும் - சனிப்பிக்கு மோங்காரங்கடந்தாய்நீயே, வானென்றமதியமூர்த்தி மூன்னைநீயே-

யவுனம்நீயொளியும்நீ மாய்கைநீயே, கோனென்றபிரமணி யாசனீயே - குறியார்க்குஞ்செட்டிநீசூத்திரனியே (௫௮௭)

சூத்திரனியதிலிருந்தகுருவும்நீயே - தோத்தரிக்கதாவுநீருசியும்நீயே, கோத்திரநீகுலங்கள்நீகுன்றம்நீயே - கோடானகோடிசெந்தும்பரிசம்நீயே, பாத்திருந்தேபுட்புகுந்தவிந்தும்நீயே - பாவம்நீபுண்ணியம்நீபாசம்நீயே, சாத்திரம்நீசமுத்திரம்நீபூமிநீயே - சாலோகசாமீபசாரூபம்நீயே (௫௮௮)

சாரூபசாயுச்சியபதமும்நீயே- தற்பரைநீசிற்பரைநீயென்தாயும்நீயே, மேருவெனுமண்டம்நீபிண்டம்நீயே - விளக்கொளிநீதீபமும்நீவெளியும்நீயே, வேரும்நீநடுவும்நீமுதலும்நீயே-விண்ணொளிநீகண்ணொளிநீவிண்ணும்நீயே, போரும்நீசேனைநீகலாபம்நீயே-புத்தியும்நீசித்தமும்நீமனமும்நீயே (௫௮௯)

மனத்துள்ளேதத்துவங்க ளெடுக்கும்நீயே - வாளுள்நீநாடிநீயங்கநீயே, தினத்துள்ளேஒடுங்குகின்றவாவிநீயே - தேசமென்றபதமெல்லாம்வாழ்க்கைநீயே, தனத்துள்ளேயொடுங்கும்நீயாமளையுநீயே - சாமளைநீதன்பதத்தின்புவனைநீயே, யினத்துளேதிரிபுரைநீயதனவாழ்க்கை - யிமயபஞ்சசத்திநீயேகம்நீயே (௫௯௰)

ஏகமென்றமவுனசத்திசுழினைநீயே- யிடையோடுபிங்கலைநீவாசிநீயே, மோகமென்றயிந்திராணிரம்பைநீயே- மூவுலகமயக்கமுந்துவசியம்நீயே, ஆகமென்றவசியம்நீயழைப்பும்நீயே- யாறிவித்துவேஷணமுச்சாடனமும்நீயே, தேகமென்றமாரணம்நீ தம்பனமும் நீயே- சித்தானவேதனம்நீபேதனமும்நீயே. (௫௯௧)

பேதனமோவெட்டுவகைசத்திநீயே- பின்னைநீயன்னைநீபேதைநீயே, பாதமும்நீமுடியும்நீநடுவும்நீயே - பத்தியும்நீயாட்கொள்ளுநும்பரையும்நீயே, சாதகமாய்வாசியுடகுருவும்நீயே- சாதித்துமேலேநின்றமறிவும்நீயே, போதமும்நீநாதமும்நீ யோரும்நீயே- பூரணத்தசிவயோகம்நீயே. (௫௯௨)

சிவயோகரிஷிகளுட மனமும்நீயே- தெளிவுநீயளிவுநீதளிவும்நீயே, அவயோகசமுசாரவாழ்க்கைநீயே- யடைக்கலம்நீ நட்டன்றிபுகையும்நீயே, தவமீறுங்காரணம்நீ காரியமும்நீயே- சச்சிதானந்தவெளித்தாயும்நீயே, சவமாகப்போனபின்பு சடலத்தீயாய்- சாம்பலாய்நீற்றிவிட்ட தருவும்நீயே. (௫௯௩)

திருவுந்நீகலையுந்நீதாகந்நீயே- சாலநீகாலநீவருடநீயே, சரு
வும்நீயுருவுந்நீகடையுந்நீயே- கனமென்றும்பாக்கியந்நீ வறுமைநீ
யே, குருவுந்நீசிஷனுந்நீசமானந்நீயே- கொண்டதொருகோலந்நீ
கூற்றுந்நீயே, அருவுந்நீயுருவும்நீலயங்காயத்தை- அந்தரூபசிட்டா
க்குமாத்தாணியே. (௱௬௪)

நீயென்றும்நானென்றும் வேறில்லாத - நிட்களமே வடிவுநின்
றநேயியோமி, மாயென்றுமவுனத்துள்ளாயியென்றும் - வன்கென்
றுஞ்சிங்கென்றும் உங்கென்றுந்தான், சியென்றும்நாயென்றுங்கடை
யேயென்றும் - தியென்றுமுண்டலியாந்தேவியென்றும், தாயென்
றுஞ்சேயென்றுந்தந்தையென்றும் - சாத்திரிது எத்தனையோவுன்
பேர்தானே. (௱௬௫)

உன்னுடையபேரோதுவேதுங்காணேன்- லோகத்தோரிஷிகள்
சித்தர்மவுனமென்பார், என்னுடையபிறப்பிறப்பி லேதுங்காணே-
னேதையானெடுத்துரைப்பேன் மகாரமென்றார், தன்னுடைய நா
மமென்பாரோங்காரமென்பார்-சகாரமென்றசத்தியென்பாரிஷிதா
னென்பார், மின்னுடையகாந்தியென்பாரதிருட்சமென்பார் - வே
தாந்தப்பிரணவமேயென்றுபோற்றே. (௱௬௬)

போற்றியவள் கால்பிடிக்கத்தாங்குவானென்பார் - பொன்னுருக்
குமொளிபோலேமேலேவீசும், போற்றியவள்கொலுவிருந்த பவு
னபீடம் - பூணுதற்குசுழிமுனையோகஞ்சூட்டம்பார், போற்றியே
அவள்மனதுமுண்டனதுநேராய் - பூரணமாங்கேசரியென்றும் குரு
வென்றும், போற்றியவள்கண்டத்திலாபரணம்பூண்டாள்-புருவமை
யத்தாயாளைப்பூசிப்பாரே (௱௬௭)

பூசித்தேயிப்படியே தோத்திரஞ்செய்வாய் - பூரணத்தேயே
சரத்தே வார்த்தைசொல்வாள், ஆசித்தேகன்னியுடமாதந்தன்னி - ல
ப்பனே நவராத்திரி யன்றைக்கேதான், பாசித்தே தசமியெட்டுந்
தேவிபூசை - பண்பாகச்செய்திடிலோர் மவுனந்தன்னும், வாசித்தார்
மைந்தர்கேள்வாமபூசை - மகத்தானபூசையிலே தெரிசிப்பாரே ( )

தெரிசனைபெற்றேயருளச் சிவனைக்காண்பாய் - தெளிவாகுந்
சுழிமுனையிலே ரவிபோற்காணும், பரிசிக்கவிதுதானே பரமோட்ச
மாகும் - பாதகம்போம் பாவம்போம் தர்மியாவாய், வாசிக்குமதி
யமூர்த்தஞ் சிந்துஞ்சிந்து - மனத்திலேயிதுவெல்லாமடக்கம்பாரு,

குருவுக்குங் குருவானகுணமாவான்-கூறவாய்சீஷிருக்குக் குருவைத்தானே (௩௯௯)

குருகாட்டிக்குருவிருந்த சூட்சதேசம் - கூறுகின்றகுருவைப் போற்குருத்தியானக், குருகாட்டித் தொனிகண்டால் சீஷன்தானே-கோடிதனமீந்தாலும் பாதத்திற்சேர்ப்பான், குருகாட்டிசுழினை ரவி வன்னிமதிமூன்றுங் - கூர்ந்துநின்றவொளிபோலே வெளியைக்கண்டால், குருகாட்டிக்குருவின்முறையைப்பூட்டிக்-கொண்டவனே சொர்க்கபதங்கொண்டானென்னே (௪௱)

சொர்க்கபதமாவதென்ன குருவேசொல்லு - சொல்லக்கேள் சுழினையடாதந்திமேடு, சொர்க்கபதந்துரியமது வெளியைக் கண்டால் - சொல்லுகிறகுருவதிலே யதிசூட்சந்தான், சொர்க்கமது சிவலோகந்தன்னையப்பா - சொல்[illegible]யனை சூட்சதேகஞ், சொர்க்கமதிற்சிறந்தல்லோ குருவுந்தானும்- சுடரொளியைக் கண்டிடவே சூட்சமாமே (௪௱௧)

ஆமப்பா சூட்சமாயிருந்தசத்தி- யருவுமில்லை யுருவுமில்லையம் மாவென்றே, நேமப்பாசடாதார தேவிபூசை - நேசித்தேன் பூசித்தேன் நினைவாய்க்காணும், வாமப்பாதேவிப்பிர சன்னமாவாள் - மவுனமென்ற சுழினையிலே வணங்கிப்பாரு, தாமப்பாகேட்டதெல்லா மீந்தாளென்பாள்- தந்தையன்பு சுழினைவிட் டனுப்புவாயே (௪௱௨)

வாயாரமனதார வொருமைகொண்டு - வசீகர உச்சாடனந்தான் மவுனங்கூர்ந்து, தாயாரைக்கேசரத்தே சாரச்செய்வித்து - தன்னுடையசீஷிருக்குத் தன்னைக்காட்டி, காயாத பழமாகச் சிவனைக்காட்டி - கருத்துறவே சிவசூட்சங்காதிற்செப்பி, சேயாகக்குருவாகத்தேவிசூட்சஞ் - செப்பியேயநுஷ்டானஞ் செப்புவாயே (௪௱௩)

செப்பிடவே தீட்சையெல்லாங் கைக்குள்ளாகுந் - தீர்ந்தவன்பு தேவியுட நிர்மாலியுங்க, ளொப்பிடவே சண்டேசர் பூசைசெய்து - வுத்தமனே தன்னைமுதற் பெண்கள்பிள்ளை, வைப்பிடவேகுரு சேவிங் கொண்டபோதில் - மகாகோடிபாவமெல்லாஞ் சொல்லக்கேளு, மெய்ப்பிடவே மேருவைப்போ லுயர்ந்தபஞ்சில் - மிளகளவுநெருப்பிட்ட கதைபோலாச்சே (௪௱௪)

ஆச்சப்பாவிதுவல்லோ சிவயோகமார்க்க - மறியார்களுலகத்தோர் ஞானப்பெயர், மூச்சப்பாவற்றவிடங் காணார்பாவி- மூளுமாவெறியில்லாக் காயக்கூடும், பேச்சப்பா தர்க்கமிட்டுசமையமெல்லாம் - பேய்க்கூத்தாயலைவார்கள் மவுனந்தோணார், வாச்சப்பாகுருவந்து வுபதேசித்து - மவுனத்தைப்பார்த்தறியார் மாயைதானே

தானென்றகூற்றனுயிர் கொள்வானென்பார் - சாருமுன்னே தர்மங்கள் செய்வோமென்பார், தானென்றவுயிர்போகிற் பாவபுண்ணியங் - கையோடேவருமென்பார் பாவமீதில், மானென்றநரகத்தே மாட்டுமென்பார் - மகத்தானபுண்ணியமே மிகுந்திருந்தால், கோனென்ற சொற்கபத மூண்டாமென்பார் - கூறுனவிருவினையின் பயன்காணுரே [illegible] (௪௱௭)

ப்பயனுவதேதென்றால் மூந்நூல்சொல்லும் - பார்மகனே திருமூலர் பாடல்சொல்லும், செயலாவதேதுமில்லைசுழினைநாட்டஞ் - சிவனிருக்கும்பீடமது சொற்கமேரு, வயணமது ஆர்சொல்வார் சித்தர்சொல்வார் - மாநிலத்தில் சித்தாந்தக் குருவேசொல்வார், நயமானவென்குருவே நந்திபீடம்- நாலானபதமதுவே பிரமந்தானே

பிரமமென்ற பரப்பிரமம் புருவமையம் - பிறந்ததேடெவ்விடத்து மொளிகளில்லை, பிரமமென்ற திதுதானேவொருமனதாய் நில்லும் - பின்னுமில்லைமுன்னுமில்லை யுற்றுப்பார்க்க, பிரமமென்றகண்ணாட்ட மெங்கேபாயும் - பேச்சிறுற் காண்பதில்லை யுற்றுப்பார்க்கில், பிரமமென்றலலாடக் கண்ணொளியைக்கண்டால் - பிலத்ததடா பிராணியென்ற வாயுத்தானே (௪௱௮)

வாய்வேதான் பிராணனென் றீரய்யரேநீர் - வகுத்துரையுமென்குருவே மூலர்பேர்பேர், வாய்வானபூரணந்தான் சிவகலைமார்க்கம் - வளமானநாசியுட விபரத்துள்ளாம், வாய்வான சூட்சமொன்று புருவமையத்தில் - வளர்ந்தகொலு பீடமங்கேயருயோகும், வாய்வானதிதுதானே சிவகலையென்றீர் - வழிமார்க்கம் வேறென்றீர் பிராணன்தானே (௪௱௯)

பிராணன்தானிருப்பதுவே மெய்தான்சொல்வீர்- பேசாமற் றூங்கையிலே சொற்பனத்தில் வைத்து, பிராணன்தானிங்கிருக்கவடி யேன்தானே - பேறெழுப்பாய்க் கயிலைக்குப் போனேனையா, பிராணன்தான் சுகதுக்கங் கொண்டேயோடிப் - பின்னொருவன் வந்திங்கே தேகந்தட்ட, பிராணன்தா னொருவனும் இரண்டேயாச்சோ- பெருஞ்சித்தா வென்குருவே யருள்செய்வீரோ (சா௰)

அருளென்ற மானுக்கான் சொல்லக்கேளு - ஆத்மாதான் சுழினையென்ற புருவமய்யத்துட், பொருளென்ற நாதாந்த விந்துக்குள்ளாய் - போதமென்ற பூரணந்தான் வதிக்குமாறு, விருளென்றவைம் பொறியு மகிலேபுக்கி - விதத்திலேதசநாதங் கரணத்தோடே, மருளென்றயித்தந்தி லலாடமீது - வசனிக்குங் கண்டுநீங்குஞ் செவிகேளாதே (சா௰௧)

கோளாறுநாவங்கே ரகலைதேறு - கொடியான வாக்கிருணைக் கோணத்தோனு, கோளானபரிசமது மரய்போலேதான் - கொண்டிருக்கு மிதிலே பிராணம்போமோ, தெளானமனத்தாலேபொறியஞ்சாலே - திரமானதுட்குட்சம் புலன்களாலே, துளான வைத்தையினற் சொற்பனங்கள் - டோற்றுவிக்குஞ் சலியினற் காணலாச்சே (சா௰௨)

ஆச்சப்பா விதனாலே நினைவுள்ளாகி - யந்தந்தப்பொறி நினைவாலதிலும்புக்கி, போச்சப்பா சாக்கிரத்தே காணநாடிப் - பூண்டதினால்சிவகலை பூரணந்தான், பேச்சப்பா விரண்டாகக் கலவிற்கண்டாய் - பேய்மக்காளுங்களைத்தா னென்னசொல்வேன், வாச்சப்பா வெங்கெங்குஞ் சிவனென்று - மயங்காதேயறிவுகுரு வாக்காலே.

அறிவுகுருவாமென்றீ ரார்தான்சொல்வா - ரய்யரோகொங்கணரோவென்னசொல்வே, னறிவுகுருவாமென்று ரப்பால்சித்தை - யாவதற்குமுறவுண்டோ மாத்திரிற்கு, மறிவுகுருவானசெயல் சொல்லிவேணு- மடிக்கடியேபேசுகிறே னென்னவேண்டாம், மறிவுகுருவானசெய லுனக்கிறேன்கே- ளப்பனேயொன்றுமனதுகாணே

காணப்பாமனமொன்றாப் பொறியாயாமல் - கயிலாசநந்தியுஞ்சுழினைதன்னிற் - பூணப்பாவிழியிரண்டும் பூட்டிப்பார்க்கிற்- போதமென்றவழிவாசிமனத்திலுண்மை - வீணப்பாபொறியான புலன்வாய்வாலே- வேதாந்தம்புக்காமற்பாவமாகுந்- தோணப்பாலொண்டறியச்சொன்னேன்கேளு - சுகதுக்கமிதனாலே சொல்லலாமே (சா௰௫)

சொல்லக்கேள்கண்கண்டு செவிதான்கேட்டுந் - துண்டமுறக் கெந்தங்கள்வாசமோந்து- மல்லக்கேளுவாசையானவாறு - மப்பனேமனத்திபானமானவாறும்- வெல்லக்கேள்சிற்றின்பக்கிறிகைவாற்வும்- வேதாந்தமனத்தோர்க்குவொழிபும்வாறுஞ்- செல்லக்கேளவத்தையிநூல்விசுத்தியுள்ளே - செம்திருக்கும்பாவசிந்தைதெளிந்துகாண்ணே (௫௱௰௬)

தெளிந்துகொள்ளவாராலாங்கொங்கணேரேஅய்யா- திருமூலர்போகனுக்குச்சிஷமூர்த்தி - யளிந்துவிடுங்காயத்தையும் மைப்போலே- யாயிரத்தெண்மாற்றுவர்னமாகச்செய்வார்- களிந்துவிடும்வாசிதனைக்கட்டுமார்க்கங் - கைமுறைதானூர்க்குவருங்குறியைக்காட்ட- சளிந்துவிடும்பிள்ளைகளையுயரவேத்துஞ்- சற்குருவேயுபதேசஞ்சாத்துவீரோ (௫௱௰௭)

சாத்துறேன்வாசியுப கருவைக்கேளு - தற்பரமாஞ்சுழினையிலேமலத்தையூணி- நேத்திரமேயிரியாமல்நேர்ந்துபார்க்க- நிலையற்றபுரியஷ்டமுள்ளாய்நிற்கு - மாற்றுறேன் பூரணந்தானுனுந்தானே- வப்பனேவோடோடியுள்ளேபாயு- மாத்துறேன்பூரணத்தைமவுனந்தாக்கி- வரிசையாய்நாலுமங்கேறும்பார்ப்பாயே (௫௱௰௮)

பாருநீயிப்படியேவாசியோகம்- பார்க்கையிலேமவுனமதுயிலக்குஞ்சித்தந் - காருநீகூடுகொண்டானுள்ளங்காக்கும்-சலசப்பால்நெய்யுடனேகலந்தாப்போல- சேருநீகொடுப்பைபிளியானாவெந்த-சிறப்பாகமிளகுசாறுகக்கொள்ளு - சாருநீகடுநெல்லி வேம்புமஞ்சள்- சாதிக்காய்மிளகோஷ்டந்தன்னைவாங்கே (௫௱௰௯)

வாங்கியேயமுரியிலரைத்துக்கொண்டு - வையாவின்பாலிலேகரைத்துக்கொண்டு- தாங்கியேபட்சமதில்முழுகுவாய்நீ - தனியாவின்நெய்முழுகுவாரந்தோறுந்- தேங்கியேபசும்பயறு வெந்நீராடு சிரசிலேநீரைவிடுசுழினைபாரு- பாங்காகக்கண்மூடிப் பாருபாரு- பார்க்கையிலேயிருகண்ணும்பஞ்சுக்கேளே (௫௱௨௰)

கேளப்பாகையிலேவிழியுண்ணியசைத்து - கேசரியில்மனமோட்டியாட்டிப்பாரு- நாளப்பாவக்கினிபோல் முருக்கம்பூப்போல்-நயனத்திற்காணுமடாசொற்கமோட்சம் - வாளப்பாவிதுவல்லோகருணைவிடு- வாச்சுதடாவுந்தனுக்குமைந்தாகேளு- கேளப்பாகோபமென்றதீயைதீற்றுங்- கொடுப்பாவர்தனையறுக்குங் கெதிகொள்வாயே (௫௱௨௰௧)

கெதியென்றபாரகெதிதானிதுதான்மைந்தா - கனலொளிபோலிப்படிதான்காணவேணும் - பதியென்றசேதியொன்று சொல்லக்

கேளு- பகலவன்தானுதிக்குமுன்னே சுத்திசெய்து- விதியென்றபிர மலாடத்தைநோக்கி- விளங்கவேசூரியனைக்கண்ணுற்பார்த்து- துதி யென்றபின்புசுழிமுனைக்கண்ணூடி - தொடுகுறிபோ லலாடத்தில்ம னத்தைநாட்டே (௬௱உஉ)

உளணியேகரத்தனில்விபூதிவாங்கி - ஓகோகோபூசையிலேகன த்போல்காந்தி- தோணியேமாதளம்பூப்போலேகாணும்- சொற்க பதமுண்டாச்சுபாவம்போச்சு- நாணியேபாதகங்களெல்லாம்போ ச்சு- நானென்றவாணுவம்போய்சித்தனுனாய் - வாணியேசொயம் பாடுமணித்தாயங்கே -- வார்த்தைசொல்வான் நந்தியிடம்வாழென் பாளே (௬௱உ௩)

வாளுகிறேன்சித்தரொடுரிஷிகளெல்லா - மகத்தானகற்பூரதீ பம்போலே- வாளுகிறேங்காயத்தையொளிபோலாக்கி- வப்பனே கருவிடையுஞ்சொல்லக்கேளு- தாளுகிறேமென்றெண்ணிச்சஞ்சியா தேநீ-சந்திரனுஞ்சூரியனுஞ்சரீரமேவ-நீளுகிறேஞ்சுழினையிலேஅ ங்சங்கென்று- நேர்முகமாயரசனங்கேயோடும்போதே (௬௱உ௪)

ஓடுகிறவேலைகண்டுராக்காலத்தே- யுத்தமனேதீபம்போல்கற் பூரத்தி- ஞடுகிறவொளிகாட்டியொளியைப்பாரு- நானென்குறிங்களி லேதேகமெல்லாஞ்- சூடுகிறசெம்பரத்தம்பூப்போலாகுந்-துடியா னவிளக்கொளியிற்சாய்கையில்லை - சாடுகிறமண்டலமேபார்க்கும் போது- தன்வயிற்றேபுடைகிளம்பிவொளிகண்டோமே (௬௱உ௫)

ஒளிகண்டோம்ராக்காலம்நாளொன்றுக்கு - வுற்பனமாய்க்கடி கையொண்டுதீபம்பார்த்து- வெளிகண்டோம்பன்புசேர் சுழினைமே லே-வேதாந்தலலாடவிழி வெளிகண்டோம்- விளிகண்டோம்பா த்தினுடவிசாலங்கண்டோம் - மெய்க்குள்ளேதத்துவங்க ளெல்லா ங்கண்டோம்- களிகொண்டோம்பூரணத்தினுஞ்சலாடி - கயிலாசத் தேகமாயிருந்திட்டோமே (௬௱உ௬)

இருந்திட்டோமிப்படியேகோடியூழி- பெங்களுக்குக்கடிகை யொன்றுமுக்காலாச்சு- வருந்திட்டோஞ்சூட்சமென்றகுளிகைதன்

னை- வகுத்துலாத்தேன்தீபமதிரவியோடுமூன்று- விருந்திட்டோம பூரணத்துக்கல்விப்பாடு- விளம்பரிதுமூன்றுவகைகுளிகைசூட்சம்- மருந்திட்டோமதுதானேயேதுமில்லை வப்பனேகுளிகையிந்த வாட்டம்பாரோ (௬௱௨௭)

ஆட்டமென்றசூட்சத்தின்குளிகைசொன்னே - னாதித்தன்கமலினியாங்குளிகைசொன்னே- னோட்டமென்றசந்திரகலைவிளங்கவாழூ-மொளியவேசொரூபமணிகுளிகைசொன்னே-னாட்டமென்றகண்ணாடிமுக்குளிகைகண்டேன்- ரசமானவமூர்த்தமெல்லாமுண்ணப் பெற்றேன் - கூட்டமென்றபிள்ளையைஞ்ஞூற் றைம்பத்தேழ்வர்- கொள்கினாரிந்திரவிசுடரிம்மூன்றே (௬௱௨௮)

சுடர்காட்டியதிலிருந்த வொளியைக்காட்டி - சொற்கபதமேலானரவியைக்காட்டி - யிடர்காட்டியிடரியென்றசுழினைக்கண்டம்- பேரொளியைமனத்தூணிப்பிறையைக்காட்டி - படர்காட்டிமதிக் கொழுந்தின்பாதங்காட்டி- பரிசுபெற்றவாதியந்தம் நடுவுஞ்சொன்னே- னிடர்காட்டிக்கால்தலையாய்சிவயோகத்தை- யிடகலையிலிருத் திநன்றாபூதென்றேனே (௬௱௨௯)

நன்றாகவிவ்வளவுஞ்சொன்னீரய்யா, தாயேனையெந்நாளுந்தான்றற்காக்க- வென்றேதான்மனதுவைத்தீர்மூலயோக- வேதாந்தச் சிரோமணியேகுருவேஐயா- யொன்றானவைஞ்ஞூற்றைம்பத்தெண்பிள்ளை யோமுடித்துபோகாமல்வலதுகொண்டு - சென்றேனான் வளர்த்தெடுத்தஞானபோதர்- சிவசிவாவென்றெனக்குதீட்சைவைபே (௬௱௩௰)

வையென்றாய்தீட்சைகளைச் சொல்லவேதான் - வாய்ப்பேச் சோவெளிதாச்சோமவுனஞானத் - தையென்றநிருத்தமிடச்சிவனைக்காட்டத்- தங்கமொருமலைபோலேகுவித்தானுந்தான் - மெய்யென்றரசவாதஞ்சத்திபேதி - வேதிக்கவகையெல்லாஞ் சொன்னானுந் தான்- ஐயென்றபிராமரொடுக்ஷத்திரியர்வணிகர் - ஆசைவைப்பாரல் லாதுவன்பிலாரோ (௬௱௩௧)

அன்பானபிள்ளையெந்தப்பிள்ளைசொல்லு- மய்யரோவென்குருவேயறியவேணும் - பொன்போலப்புத்தியுள்ளசிஷாகேளு- புகலுறேன்சூத்திரர்க்குத்தீட்சைசொல்வோ- மென்போலேசருவமெல்லாமறியவாளா- வெண்ணினூர்சொல்லக்கேளுதானசூத்திரன்-தன்போலக்குருச்சாய்கைநிழல்போலச்சொல்வான்- தனங்கோடியீவதற்குமனமொன்றுனே (௪௱௯௨)

மனமொன்றானுயிரெல்லாம்நாமேயென்பான்- மற்றுமுள்ளதாவரமுநானேயென்பான்- தனமென்றமுதலெல்லா மாசையோரான்-சற்குருவேகாத்திருக்கச்சலியானய்யா- தினவென்றலறிவிலேபத்திநிசமென்பான்- நிற்குணமாம்பரவெளியைத்தெளிந்துபார்ப்பான்-சினமென்றகோபமொருநாளுமில்லான். - திருவேடச்சித்தர்களைப்பழித்திட்டான்காண் (௪௱௯௩)

காணப்பாதாய்தந்தைதாரம்பிள்ளை- காதலுறமனம்வையான்சிவாலயங்கள்பாரான் - பேணப்பாவலஞ்சுற்றான் மாய்கையில்லான்-பிரதாபப்பேச்சுரையான்மவுனியாவான்- தோணப்பா தீனியுடவாசைகொள்ளான்- தோகையர்கள்தொல்யோனி யாசைகொள்ளான்-பூணப்பாபொன்னாசைதன்னையேலான் - போக்கற்றவிரதங்களனுஷ்டிப்பானே (௪௱௯௪)

அனுஷ்டியான்கொக்கோகமதனசாஸ்திர - மனவற்றநால்வேதஞ்சிப்பிசாஸ்திர- மனுஷ்டியான்பாதமொடு வயித்தியசாஸ்திர-மப்பனேமாந்தரீகங்கெணிதசாஸ்திர- அனுஷ்டியான் ஆறுவகைத்தொழிலுங்கல்லா- னலமானசிவதீர்த்தமப்பேதென்பா- னனுஷ்டியானண்டபகிரண்டமெல்லா- மாசையுற்றமாய்கையென்பானன்பன்தானே (௪௱௯௫)

தானென்றவாணவத்தைநந்திமூட்டி - தானெரிப்பான்வாயினூற்சிவயோகத்தால்- மானென்ற[illegible]மாயிவாமதேவி மாதாவைப்பூசிக்ககருமந்தப்பான் - தேனென்றவெண்ணூமலகரியுண்ண - தெளிவானசிந்தைபெற்றோமொன்றூர்கும்பிட்டுங் - கானென்றசெங்கையோன்கற்பங்கொள்ளான் - கர்மவான்தன்மையுள்ளான் செயலைப்பாரே (௪௱௯௬)

செயலானமகராசபிரமரிஷியாவான் - சித்தர்களெல்லாமகிழ்ச்சித்தனுவான், நலமானசாயுச்யபதமாம்ஞான- நாலானபூரணத்தில்சூத்திரயோனி- மயமானசூத்திரனேமவுனஞானி - மற்றுமுள்ளமு

ச்சாதிசரிதைவாழ்க்கை- யியல்பானசிவரூபந்தன்னைக்காணு- னிகத்
திலேகுருவென்றேயிருப்பார்காணே (௪௱௭)

காணப்பாசொல்லக்கேள்லோகவாக்கியக்- காரியகுருவாயிரு
ப்பார்தீட்சைசொல்வார்-பூணவேசேகண்டிமணியிரேருஷை-பொற்
றவளசங்கமொடுதொனிகளார்ப்ப-தோணவேஓமகுண்டங்கர்மப்பூ
சை - சொல்லிமெத்தச் செய்திடுவார்கருவில்லாமல், வேணயடி தீ
ட்சையிலுங் கருவில்லாமல் - வெள்ளிசெய்யுங் கைமுறையிற்கருவி
ல்லாதே (௪௱௮)

கருவென்ன வென்குருவே சொல்லவேணும் - கைமுறையி
ற்கருவென்ன சொல்லவேணுந், திருவென்னுந்தீட்சை கருசொல்ல
வேணுஞ் - செப்பக்கேள்மாணாக்காள் குறியைச் சொல்வேன், குரு
வென்னும் பரம்பராநந்திமோனங் - குருகொண்டகுழியிலேகூ
ர்ந்துபாரு, தருவென்றுங்கைமுறையிற் கருவைக்கேளு - சத்தியங்
கமேவுதற்குத் தங்கந்தானே (௪௱௯)

தங்கமன்றிக் கைமுறையைப் பணங்கள்காசி - தான்வைத்தே
தீட்சைசெய்வார் சத்தியில்லை, யுங்களுக்காய் சொல்லிவிட்டேன் தீ
ட்சைமூல - மொருகோடித்தலைமீற்றுஞ் சொல்லாரய்யா, சங்கை
யுடன்சற்குருவை யடுத்துக்காரு - சாபங்கள் தன்னையழித்து சாபஞ்
சொல்வார், மங்கையரைச்சேராதே மயலாகாதே - மாண்டிடவே
புத்திசொன்னேன் வாழென்றேனே (௪௱௰)

வாருகிறகாரணமாஞ் சீஷர்தன்னை - மகத்தான குருமார்க்க
ஞ் செய்யவேண்டி, வாருகிறகுருவெங்கே சமாதிதீட்சை - யடங்
கியேபிரமவழி லிங்கமாகி, நீருகிறசீஷருக்குக் கையைக்காரீக்க-நே
மநிஷ்டை யபிஷேகம்பட்டங்கட்டு, குருகிறகாரணமா யாகசாலை-
தோன்றவேகட்டிநடு குண்டஞ்செய்யே (௪௱௰௧)

செய்யப்பாசீஷருக்குப் பட்டங்கட்ட - தீட்சையிலே முப்ப
த்துரெண்டுஞ்செப்பி, வையப்பாதங்கரவிக் கடகம்போடு - வாகா
ன தங்கரவி டவுத்திரம்போடு, மெய்யப்பாதங்கரவிக் கொலுசுபோ
டு - விளங்கவேயஷ்டகர்ம மணிகள்பூணு, தையப்பாருத்திராட்சவா
குமாலை - தன்மணியைப்பத்தாறு கோர்வைதானே (௪௱௰௨)

கோர்க்கையிலே முகமணிக்குக் குளிகைகேளு - கொத்தாகச்
சரடிட்டேங் கூறக்கேளு, சேர்க்கையிலே யிடைக் கிடையிற் பவள

ஞ்சேரு - நெறப்பாகவாருசரங் கோத்தொன்றுக்கு, பார்க்கையிலே நூற்றெட்டு மணிதான்சேர்வை - பண்பாகக்குளிகைவெட்டு முகத்தி ற்சேரு, வேர்க்கையிலேமணிகட்டிப் பன்னிரண்டு - விடைக்கிடையிற் றங்கரவிக் குளிகைசேரோ (௪௬௩)

சேரப்பாதங்கரவிக் குளிகைதானே - சித்திசெய்யும் விராகனி டைமணியாய்ச்சேரு, சேரப்பாவிரலாழி வட்டத்துள்ளே - சிறக்க வே ரசக்குளிகைதன்னை நன்றாய், பாரப்பா தங்கத்தாலணைத்துக்கட் டு - பண்பாகவுள்க்கட்டு ருத்திராட்சம், கோரப்பா பருமணியாய் முப்பத்திரெண்டு - கோர்த்திடையில் துளசிமணி கோர்த்துப் போடே (௪௬௪)

போடந்தவிருகலைக்கு குளிகைசேரு - புகழாகருத்திராட்சமா றுகட்டி, நாடந்தபொன்னூலே கவசந்தானும் - தங்கரவிக் கம்பியி லே கோர்த்துப்போட்டு, தேடந்ததிருமேனிக் கடுக்கனப்பா - சிற ப்பானருத்திராட்சஞ் செட்டிலொன்று, கூடந்தரசகுளிகை கடுக்க னொன்று - கோப்பானதங்கரவிக் கடுக்கனொன்றே (௪௬௫)

கடுக்கனிலே முச்சாடுகோதில்போட்டுக் - கம்மீதில்ருத்திராட்ச ங் கோர்வையஞ்சு, வடுப்படாமணியாக நூற்றெட்டுஞ்சேர் - வகை யாகஅஞ்சுவகைக் கோர்வைக்குந்தா, னெடுப்பாகமுகமணிக்கு கு ளிகைசேரு - இடைக்கிடையில் பணவிடையில் மணிதான் தங்கந், தொடுப்பாசதுளசிமணி கோர்வையொன்று - துலங்கவே நூற்றெட் டுஞ் சொல்லக்கேளே (௪௬௬)

கேளடாமுகமணிக்கு குளிகைசேரு - கெட்டியாயிடைக்கிடை க்கு முத்துக்கோரு, வாளடாதங்கமொரு பலத்தகட்டில் - வளமாக நாற்பத்துமுக்கோணத்தை, நாளடாவனாநத்தனே லலாடமீதில் - ந ந்திதிருமூலமொன்றேபட்டங்கட்டு, கோளடாவாராமல் ஓமகுண்ட ங் - குழிப்பானபிறவியென்று வளர்ப்பாயோம, மூளடாகும்பத்தி ற்குருவைத்தியானி - முத்திபெறவாகுதி செய்பின்புதானே (௪௬௭)

தானென்றசிஷனங்கே தீர்த்தமாடி - தன்காலிற்குறடிட்டுக்கா யாசிந்தாஸ், மானென்றகவிசனமா யனைக்குக்கட்டி - மகத்தானபு

வித்தேவலை தரித்துக்கொண்டு, தேனென்றஞமருண்டத் தன்னிற்சே
ர்ந்து - தெளிவாகத்தெண்டனிட்டு குருவைநோக்கு, கோனென்ற
கும்பநீர் புரோக்ஷித்தேதான் - குருநாதன் பதஞ்சென்னி கொள்
கையாமே (௪௪௮)

ஆமப்பாநாற்காலிப்பலகைமீதி - லப்பனே டேனைத்தானிரு
க்கச்சொல்லி, தாமப்பாசாம்பிராணித் திலதம்போடு- சகலவபிஷே
கமெல்லாந் தானேசெய்து, வேமப்பா நெய்வேத்திய மெல்லாஞ்
செய்து - வேகச்சிதானந்த மூர்த்தியென்று, நாமப்பாநாமமென
விபூதிசாத்தி - ரசகுளிகைவிரலாழி தன்னைப்பூட்டே (௪௪௯)

தன்னையல்லோ போதித்துச் சிவனைநோக்கித்- தருவாகவேகு
ட்சந் தானுய்க்கொண்டு, பின்னையல்லோதூபமொடு தீபங்காட்டி-
பொற்கற்பூரா லாத்திதன்னைக்காட்டி, சொர்ணபுஷ்பந் தன்னைச்சா
த்தி யுபசாரங்கள் - சோடசங்கள்பதினாறுஞ் செய்தபின்பு,நன்னய
மாய்சிஷரெல்லாந் தெண்டஞ்செய்ய - நந்திகுருவபிஷேகப் பட்
டங்கட்டே (௪௫௰)

கட்டியதோர்சிஷர்தொழுங் குருநாதன்தான் - கதிசிஷபிள்ளை
கட்குப்பூதிசாத்தி, நிஷ்டையனுஷ்டான விதிசெய்யுங்காலம் - நே
ராகச் சிஷரெல்லாம் பொற்பூவைத்து, பட்டாபிஷேகமே பூண்ட
குருவென்று- பாதமலர்தனில்வீழ்ந்து முத்திசேர்வார், திட்டமுட
ன்பின்பல்லோ சிஷர்க்கெல்லாஞ்- சிவஞொளியைக்கண்ணுறவேதெ
ரிசிப்பாரே. (௪௫௧)

தெரிசிக்குந்தெரிசனைதான் சொல்லவேணுஞ் - சிவமானகோ
ங்கணரே குருவேஐயா, பரிசிக்குமாணுக்கள் சொல்லக்கேளு - யா
ர்நந்திசுழினையிலே உற்றுப்பாரு, பொருள்சிக்கும்பூரணத்தின் பெ
ருமைகாணும் - பொன்னிருக்கும் வர்னமெனப் பூணக்காணு, மரு
ள்சிக்குமோட்சகெதி நாமேயாச்சு- வாலைமேனுமையுமொன்றாய்
க்காணே. (௪௫௨)

காணப்பா சேதியொன்று சொல்லக்கேளு - கங்கையொரு
பாத்திரத்தில் விட்டுக்கொண்டு பூணப்பாமங்கென்றே யவ்வுங்கூட்
டி - புகழாககடிகையொன்று பூணப்பாரு, தோணப்பாமண்டலத்தி
ல் முகங்காணாது- சுகமாகப்பதினாறு மாதம் பார்த்தால், பேணப்பா
சடலமெல்லாஞ் சாய்கையில்லை- யிலத்துதடாகாயத்தை யொளியா
யாதே, (௪௫௩)

ஒளிகாணவொளியாயாதுடலமெல்லா- ரூத்தமனே சித்தருமுறு
ம்பதவியாச்சு, வெளிகாணவம்பரத்தேவெளியுமாச்சு- வேதாந்தஞ்
சித்தாந்தம்வெளியாய்ப்போச்சு, களிகாணமூக்குநுனி மேலே சே
ரு- கயிலாசபார்நந்திகாணலாச்சு, சுழிகாணபுருவமையத் தமரிலே
றிச்- சுகாதீதச்சிலம்பொலியைக்காணலாச்சே (௪௫௪)

ஆச்சப்பாநால்வேத மாறுசாஸ்திரம் - அப்பனேபதினென்
புராணமெல்லாம், போச்சப்பா[illegible]கலைக்கியானந்தான்-
பொறியிட்டபஞ்சபோற்[illegible]பா சாசுவதிதோ
த்திரஞ்செய்வாள் - மகாலட்சுமியடப்பங் கட்டிநிற்பாள், பேச்சப்
பாசீஷருக்கு தீட்சையோதி - யிலக்கவேறவசாபந் தீர்த்துச்சொல்
லே (௪௫௫)

சொல்லடாவதன்பிறகு அஷ்டகர்மஞ்- சுகமாகச்சித்திச்சா வ
னுஷ்டானத்தைச், சொல்லடாகாலைசந்திமாலைசந்தி - சுறுக்காணச
டாதாரதீட்சையோதி, சொல்லடாமேல்மூலவறுகோணத்தைச்- சூ
ட்சத்தைப்பற்றினபின் தூலத்தாறுஞ், சொல்லடாமவுனத்தால்பூசை
செய்யத் தோன்றியபின் அஞ்சுவிததீட்சையோதே (௪௫௬)

ஓதப்பாபஞ்சபூதத்தின்வாழ்க்கை - யுத்தமனே சண்முகமாம்
வதனபூசை, ஓதப்பாவிதுவெல்லாஞ் சித்தர்சொல்லா- ருங்களுக்கா
ய்ச்சொல்லிவிட்டேன் சித்தாய்போக, ஓதப்பாவதன்பிறகுதசமாந்
தீட்சை யுரைத்தபின்பு சூட்சத்தைப் பற்றச்சொல்லி, ஓதப்பா மூல
த்தைப் பற்றச்சொல்லு - வுண்மையுடன் குருபதத்தைபூணச்சொ
ல்லே (௪௫௭)

சொல்லான[illegible]னையிலே குருபாதந்தான் - சூட்சமிது தூலமி
து மூலமிதுமூன்றும், வில்லானதேவனைந்தம்புனைதத்தாப்போல் -
வேதாந்த வெளியொளியை மேவிப்பார்க்க, வல்லாதேமனக்கண்ணு
லலாடம்நோக்க - வகைசொல்லிக் குளிகைதனை கையிலீந்து, வெல்

வாதேபோவதில்லை வேதாந்தத்தை- மேவியேபராட்டால் சாம்ப லாச்சே (௫௰அ)

சாம்பலாய்ப்போகுமடா சடலந்தானுந் - தையலார் மோகத்தால் சனங்களெல்லாம், வேம்பாகுஞ்சுழினைதனைப் பற்றினுக்கால் வீணாய்ப்பெண்கள்மயல் வெந்துபோச்சு, சோம்பாதேகோபமெல்லாம் வெந்துபோச்சு - சுழினையென்றநந்திசிவந் தன்னைப்பார்த்து, தாம்பானதாயென்றே வாமபூசை - சாதித்தால்தையல்மயல் தருகிப்போச்சே (௫௰௧)

போமடாதிரோதாயிமாய்கையெல்லாம் - புண்ணியரோயுங்களுக்குப்பூட்டிச்சொன்னேன், ஆமடாதிறவுகோல்சுழினைநந்தி- அப்பனேசிஷருக்குச்சொல்லுமப்போ, தாமடாசகலத்தி னகலங்கேளு- சாத்துகிறேன்சாணெட்டுநீளமீரா, றேமடாசிரசுமேற்கூடாரம்போலெண்டிசையும்விரித்து தன்றுயிருக்கச்சொல்லே (௫௰௨)

இருக்கவேகுருநாதன்முன்பாய்த்தானே - யிதமாகச்சிஷனைத்தானடுக்கவைத்து, யிருக்கவேயிடதுகுதி மூலத்தூட்டி - யின்பமாய்வலமூமிட யிருக்கச்சொல்லி, யிருக்கவேசத்திசிவமொன்றுய்க்காண- வேந்திழைபார்நாதமதிற்கற்பூரமிட்டு, யிருக்கவேசெவிநெஞ்சுகூடக்கூட்டு- யிருந்தபின்பு நாலாநாள்சித்தியாமே (௫௰௩)

சித்தியாந்தெளிவாகவிருத்துக்கொண்டு - சோதிமேலசாம்பிருணித்தயிலம்நேராய், மூத்தியாங்கோரோசினைகுங்குமப்பூ - மூழுங்கவேகால்படிக்குக் கழஞ்சிவீதம், சத்தியாந்திருமந்திர மெட்டுங்கொண்டு- சாரவிட்டுதேனுமதிலெட்டுக்கொண்டு, சுத்தியாக்கோஷ்டமதுகழஞ்சுதன்னை - சுகமாகப்பெண்முலைப்பால்விந்திலாட்டே ()

ஆட்டுவாய்கிரிகட்டை துளசிச்சாற்று - லரைத்துநீயொருசமுஞ்சுகூடப்போட்டு, மூட்டுவாய்குழம்பாகத்தயிலந்தன்னை- மூத்திபெறச்சித்திபெற நெத்திக்கண்ணில், தீட்டுவாய்திலதமங்கேயிட்டபின்பு - சிஷனுடவிருவிழியுஞ்சுழினைபார்க்க, காட்டுவாய்குருநாதன்கடைக்கண்ணிற்றான் - கைவிரலாலமிழ்த்திவேயழுத்துவாயே ()

வாயப்பாசூரியன்போற்பிரகாசிக்கும் [illegible]மாய்த்தோணுமடாமவுனந்தானும், நீயப்பாதானைப்பாவென்பதில்லை - நீசித்தவிடஞ்சிவயோகம் தெரிசித்தேதான், காயப்பாபழமாக விராசனைப்போல் - கனிந்துபத்திபெறுகருணைமிகவுமுண்டாந், தாயப்பாவார்

த்தைச்சொல்வாள்சொர்க்கமோட்சந் - தான்லபிக்குங்குருநாதன்தன்
னைப்போற்றே (௪௱௪)

போற்றென்றுபதேசம்வாலைதீட்சை - புரிவாகச்சொல்லிய பின்யோகசித்தி, முத்தென்றுமுத்தியுடன்கடந்தஞான-முடியடியா ய்க்கண்டபின்புமோட்சமாச்சு, மற்றொன்றுமில்லையப்பாயோகம் ஞானம் - வாச்சுதடாசீஷனுக்கு மருவிப்பார்த்து, சித்தென்றசித் தெல்லாம் வசமாய்ப்போகுஞ் - சிவயோகத்தன்னாலே தெளிந்து காணே (௪௱௫)

தெளிவானசீஷருக்கு குருநாதன்தான் - திறமாகமாத்திரைக் கோல்முச்சாணீந்தான், அளியாமல்யோகசாதனையின்வெட்டி-வப் பனைவெள்ளிகட்டும்பிரம்பிரேறு, பளியாதவுப்புசரஞ்சிவாக்கினை க்கு - பத்தமுடனேகொடுத்துப்பாதரெட்சை, கழியாமல்குறடுந் துவளாக்குக்கட்ட - காயசித்திஞானசித்திகருவைக்கேளே (௪௱௬)

கருவானதேதென்றால்தங்கநாண்பூட்டி - காயாசங்கவுசன் மேதரிக்கச்சொல்லு, பெருவாழ்வுகண்டகோடாலியிந்தே - பிரதா பச்சட்டைமுனி மக்களென்றார், இருவாவாவென்பார்கள் மடியில் வைத்தே - யென்குருவேசுந்தரானந்தவென்பார், குருவாகக்கம்பி ளியின்சட்டைபூண்டார் - கொத்தடிமையாவார்கள்சித்தர்தானே ( )

தானென்றசடலமெல்லாம்நாற்றபாண்டந் - தசைநரம்புமூ ளையொத்தந்தண்ணீர்பாண்டங், காமென்றபுழுக்கூடுவெறும்புரோ மங் - காமமோர்பொய்க்கூட்டுக்கடவாவீடு, பாமென்றவொன்ப துதிட்டிப்பாழாம் - பிற்றல்பாவமிகவேபடைக்கும் வித்துநாதங் கோமென்றபஞ்சபா தகம்விளைக்குங் - குலமானதாபரசங்கத்திற் றானே (௪௱௮)

சங்கமென்றுவெழுதோற்றம் யோனிநாலு - தாபரத்தினிலே போமரங்கள்பூடு, சங்கமென்றகலக்காவேயவாசைக்கு - மளவில் லைக்கணையில்க்கணக்குமில்லை, மங்காதமலக்கூடுகோனத்திறட்ட - மா

யையிலேசென்றிருக்குமனந்தானப்பா, வங்காரப்பெண்ணாசைதன்னைக்கொண்டு - மாருகின்றதின்னாசைவைக்குங்காணே (சளசு)

காணப்பாவிச்சடலநம்பவேண்டாங்- கடைகெட்டசென்மவிதுநமனுக்கேது, பேணப்பாவென்குருவேயோகர்பிள்ளை - பிறப்பிறப்போவில்லையென்றீர்நமனங்கேது, மாணுக்காள்சொல்லக்கேள்விந்துநாதம்- வாயுவுடன்வைத்திடும்போதமைத்தவாழ்க்கை,தோணப்பாசொல்லக்கேள் புரியஷ்டத்தால் - சுகமாகவேகளைவிணாய்ப்போமே (சளய)

வீணிலேபோயங்கேசுழுத்திக்குள்ளாய் - மேலானநந்தியுடநமன்தான்காணும், பூணிலேநமனிடத்தையுற்றச்சொன்னீ - ருத்தமனேயென்குருவேசூட்சமென்ன, காணிலேயென்றுயேசொல்லக்கேளு - காலடாவீடகலேதான்மதிநேரய்ந்தாப்போல், நாணிலேபுருவமையக்கூற்றனில்லை - நாடினேன்சூட்சமதிவிறக்குந்தானே ()

இறக்குமிடம்பிறக்குமிடஞ் சொன்னீரய்யா - வெளிதல்லவென்குருவேநன்றாய்ச்சொன்னீர்,மறக்குமிடமில்லையினியுன்பதத்தைவாழ்த்தியெந்தன்சிரசுமேற்கொண்டேனய்யா, பிறக்குமிடமுன்வயிற்றில்பிறந்தேனையா - பேரானநடைப்பிள்ளை யென்றுவாழ்த்திதிறக்குமிடமுபதேசஞ்செய்யவேணுந் - தேங்காயுந்தெட்சணையும்வைக்குறேனே (சளஉ)

வைக்கிறேன்மேருப்போல மலைகளெல்லாம் - வாதத்திலேவேதையிருக்குத்தபேதி- வைக்கிறேன்தாம்பிரமொடுதீபபேதி- வளமானகனபேதிபரிசபேதி- வைக்கிறேன்சிலபேதிவாயுபேதி- மகத்தானரவிபேதிமதியின்பேதி,வைக்கிறேன்நவபேதியொன்பதையுமய்யா, மவுனமென்றதிட்சைக்குத் தியானந்தான்காணே (சளஙா)

காணவேவேதைமுறை சொல்வேனன்றாய் - கயிலாசவர்க்கமடாநாங்களெல்லாம்- பூணவேயெங்களுக்குவேதமார்க்கம்- பொன்மாத்துவாயிரத்தஞ்ஞூறுமோடு- நாணவேநவபேதியிடுவோம்நா

ஙகள்- நற்றுணமரந்தொட்டுசெடிபூமரங்கள்- காணியிடைசெந்தாரங்கோடிமட்டுங்- கனகமாய்ச்செய்திடுவோமின்னங்கேளே ( )

கேளப்பாபூமியொடுவத்தரத்தின்மட்டுங்- கெடியாகப்பொன்னாக்கிவிடுவோமாயை - வேளப்பாமானுக்கா வென்னசொன்னாய்- மெய்யாவிபொருள்மூன்றுந்தத்தஞ்செய்தால்- வாளப்பாவென்று சொல்லிமவுனதீட்சை- வைத்திடுவோந்தங்கத்தால்காப்புக்கட்டி-நாளப்பாவார்த்தையிட்டுக்காலம்போனால் - நான்மவுனஞ்சொல்வதெப்போநாதவாழ்வே (௪௱௭௫)

நாதாந்தப்பேரொளியே குருவேஐயா - நந்தியருள்செய்யவோர்தானைவாங்கும்- வேதாந்தப்பேரொளியே யாட்கொள்ளவேணும்- விளங்கவேகடைப்பிள்ளையாகவாழ்வேன் - போதாந்தநந்தீசா சொல்லக்கேளு- பூரணமாமதிபோலேகண்ணில்காணு - மாதாந்தமதின்கடிகை ரண்டுகேளு - மாதமென்றுப்பதினாறு மாதங்காணே (௪௱௭௬)

பதினாறுமாதந்தானிரவிதன்னைப் - பற்றவேயுதையத்தில்ரவியைப்பாரு- செதினாறும்பார்க்கையிலேமவுனவீடு-செகமெல்லாமடங்கவேவொளிதான்வீசு- மதிகோடிவன்னமடாமாதளம்பூ - வன்னமலரொக்குங்காந்தியங்கேமனங்கூசாதே - விதினாறுங்கோடிபட்டம்பிரமமாகில்- விளங்கக்கேளிப்பலன்தானொடியொன்றச்சே ( )

ஆச்சப்பாவிப்படியேமவுனமூல- மளவிட்டுக்கனாகண்டோரில்லையப்பா- நீச்சப்பாமவுனத்தையாருஞ்சொல்லார்- நீயெனக்குக்கடைப்பிள்ளையாகச்சொன்னேன்- மூச்சப்பாவற்றிடத்திற்குளிகைபோட்டால்- மூவுலகுமுருக்கம்பூவர்னமாகும் - வாச்சப்பாஅகாரஉகாரத்தோடு- மகாரசிவமாயிருந்தவஞ்சம்பாரோ (௪௱௭௮)

அஞ்செழுத்துமூன்றெழுத்திலடங்கிப்போச்சு- வப்பனேமூன்றெழுத்துப்போதமாச்சு- விஞ்சையிறுசாயுச்சியமிருந்தவீடு- விண்ணுடன்மண்டிருக்குமில்லையாச்சு - சஞ்சீவியுடற்கூடுவிட்டுப்பாயுஞ்-சாரூபம்பெற்றிருந்தமவுனவாழ்க்கை- தஞ்சமென்றமூன்றெழுத்தின்குறியைக்கேளு-சாத்துறேனிடகலைஉகாரந்தானே(௪௱௭௯)

தானென்றபின்கலையகாரவீடு - தாயிருந்தடகாரமடா சுழினை வீடு- காமென்றசுழினையின்மேற்புருவமையத்தே - கண்ணொளியாய்விந்துவுடநாதங்காணு- மானென்றவாசியடாபுருவமேலாய்-வட்டங்கண்டுவிழிமருவிப்பார்க்கில்- கோனென்றவட்டத்தில்நடுவேநின்ற- குமரியவள்வாலையடாசிறுபெண்காணே (௫௱௮௰)

சிறுபெண்போலேயிருப்பாளாத்தாள்யாரு- செகமெல்லாமவளுடையகூத்துக்கூத்து - வுறுதியுடன்சொன்னீரோ கொங்கணரோ அய்யா- வுருவமோஅருவமோசொல்லவேணும் - பொறுமையுறுஞ்சுரூபமென்னில்வடிவுசொல்லும்- பூரணமேயென்குருவேபூரணமேவானே- வெறுமைதனைத்தீர்த்தொளிக்குமவுனபீடம்- வேதாந்தநிற்குணத்தைச்சொல்லக்கேளே (௫௱௮௧)

கேளப்பாவுருவமென்றாலழிந்துபோச்சு - கிலிலையதுயோகிக்குவெளியாய்க்காணும்- வாளப்பாசொரூபமென்றாலருணாந்தமவுனமென்றால்சுழினையிலேமனதூணிப்பாரு- வேளப்பாநிற்குணமேசுழினைநாடி- மெய்யானநிருமலமேமூலகூட்டம் - மாளப்பாநிரஞ்சனமேயொளிவுதேக,மப்பனைகத்திநடுவோம்பாரே (௫௱௮௨)

ஓடுகிறகத்தியதுதூளாய்ப்போகு-மோகோகோவேதாந்தஞானதேகம்- நாடுதற்குப்பூரணத்தைநாடிநாடி - நமனுனேன்சுழினையிலேமாண்டுபோனு- ஞடுகிறகூத்தெல்லாம் பூரணத்தின்கூத்து-வண்டாண்டத்தடாகமட்டும்வளைத்தேயாடு - தேடுகிறதேட்டெல்லாய்ஞானத்தேட்டு சித்தமுறமவுனத்தின்மோட்சந்தானே (௫௱௮௩)

தானென்றமோட்சமதாஞ் சாயுச்சியத்திற் - தானேநிநின்றவனே யோகஞானி, தேனென்றஞானியென்றால் சடலம்போனுல்-சிவநிலையில் நின்றிடுவான்பரத்திற்சேர்வான், காமென்றபாகெதிதான் பெற்றாலாகில் - கயிலாசங் குடியிருப்புக் கனகதேச, மானென்ற யோகியென்றால் சடலம்பேணி - வாய்வதனையுண்டிடுவான் கற்பந் தானே (௫௱௮௪)

கற்பந்தானனந்தவரைக் கோடியாக - கயிலைசத்தசாகரமுங்கருதிப்போவான், கற்பந்தானுதிதொட்டு வந்தமட்டுங்கைமுறையாய்த்தவறாது இன்பாரய்யா, கற்பந்தானவமிருத்துதனையதட்டி-கை

முறையாயறுகலையுந் தனத்திப்போட்டு, கற்பந்தான்கொண்டோர்க்கு குருவைக்காத்து - கமலிமொய்பந்தோணாது கருதுவானே ()

கருதியேவாலமுத லஞ்சுதிட்சை - கட்டாகவுபதேசஞ் செப்பக்கேட்டு, குருவின்ழுற் சாய்கையென்பார் லவத்துக்கொண்டோர் - கற்பசித்தியோகசித்தி ஞானசித்தி, பெருவாழ்வு சித்தமெனப் பேருஞ்சொல்வார் - பிதற்றுதேகுருபதத்தைத் தொழுதுகாக்கில், கருவிருந்தவிடங்காட்டி நாதங்காட்டி - கயிலாசதேகமதாய்வாழ்வம்பாரோ (௪௮௭)

[illegible]

பாரப்பாகுருவுக்குச் சீஷன்தானே- பாவங்கள்தனைவிளைத்தால் நரகஞ்செல்வான், சேரப்பாகுருவுக்குச் சீஷன்தானே-செய்கருமந்தனை விளைத்தால் சொற்கமெய்துப், வாரப்பாகுருவுக்குச் சீஷன்தானே - வளமாகமனதுவர நடந்தானாகிற், பேரப்பா கேட்டிடனே யெமதூதாள்தான்- பிடிப்பாரதோடிவர் காண்பேணுவாயே()

பேணுவாய்காரணமாங் குருவைக்கண்டால் - பிதற்றுமலொருமனதாய் வாரம்வைத்து, பூணுவாய்மோட்சபதந் தன்னையீவார்- பூதலத்தில்மேறைப்பாய் போகாதேநீ, காணுவாய்ராசாக்கள் கருதிக்காத்தால், காசினியெல்லாஞ் செனிக்குந்தேவநீதி - தோணுவாய்தீட்சைபெற்றால் ராசாக்கடானுந்- சொற்கபதந் தனைச்சொல்வார் பாவம்போச்சே (௪௮௮)

போச்சென்று சொல்லீரோ கொங்கணரோஅய்யா-புகழாகநானுமொரு ராசபுத்திரன், எச்சென்றபாவமென்று விலக்கோவில்லை- யிதிம்பனென்ற கெடிம்புத்தி கணக்கோவில்லை, வாச்சென்ற பாவமெல்லாமாணுமோதான் - சற்குருவேசீவகனே சொற்கமாமோ, காச்செனீறகுழியினையிலேந்திகாலிற் - கனாகொள்ளாப் பாவமெல்லாங் கழன்றுபோமே (௪௮௯)

போமப்பாராசாவை நம்பினபேர்கோடி- புகழாகவவரவரோ செய்பாவங்க, ளாமப்பாராச்சியங்கள் செய்பாவங்க- ளப்பனேவிறுவெல்லா மிலக்கில்லாமல், தாமப்பாராசாவி னிடத்திற்சாருந்- தவறுண்டுபோவதுதான்றுமைமெத்த, வேமப்பாகுழிமுனையிற் காந்திபெற்றால் - வெறும்பாழாய்ப்போகுமடா பாவந்தானே (௪௯௰)

தானென்ற கோடிம்பாவந் தீர்க்குமாசான் - தருமத்தின் வழிசொல்லி கருணைவைப்பான், ஊனென்ற மந்திரமே யுபதேசித்து-

புண்மையுடன் சுழினையிலே யிருக்குமென்று, கோனென்ற சிவரூப
ங் கண்ணிற்காட்டி - கோபமென்ற புனைபோக்கி யாசைபோக்கி,
ஆணென்றவாணவங்கள் தன்னைப்போக்கி- நாலுவார்குருநாதன்மோ
ட்சந்தானே (௪௬௧)

நாடுகின்றசுழிமுனையிற் குறியுஞ்சொன்னேன் - நீவானபரு
வமய்ய வொளியுஞ்சொன்னேன், தேடுகின்றசித்தாந்த கிரியைசொ
ன்னேன் - திருட்டிவித்தைக் குருக்களிட திறமுஞ்சொன்னேன், பா
டுகிறவேதாந்தப் பண்புசொன்னேன் - பரூ[illegible]னமுத்திரையும் பல
மாய்ச்சொன்னேன், [illegible]ஞ்சொன்னே - ரு
தாரமாறுமுதற் பரஞ்சொன்னேனே (௪௬௨)

பரமானலலாடத்தின் போதஞ்சொன்னேன் - பசுபதிபாசஞ்
சொன்னேன் தச்காரியமுஞ்சொன்னேன், திறமானயோகத்தின்மா
த்திரைகள் சொன்னேன் - தேவிபுடபூசைவிதி கற்பஞ் சொன்னே
ன், சாமானவிடகலையும்பின்கலையுஞ்சொன்னேன் - தலைகீழாய்க்கொ
ண்டிருந்தழலுஞ்சொன்னேன், புரமானமுப்புரமுப்பாழுஞ்சொ
ன்னேன் - பூரணத்திணிலைசொன்னேன் பொருட்சொன்னேனே ( )

பொருளோடு அருள்சொன்னே னுருவுஞ்சொன்னேன் - போ
தத்தின்சொரூபமொடு அருவுஞ்சொன்னேன், திருவான மகாரத்தி
ன் மவுனஞ்சொன்னேன் - சிவமேனுசத்தி பிரகாசஞ்சொன்னேன்,
கருவானகண்ணூட்ட மனக்கண்சொன்னேன் - கண்ணொளியால் வி
ண்ணொளியைக காணச்சொன்னே, னிருவினையாம் பிறப்பிறப்புமா
ர்க்கஞ்சொன்னேன் - யோகமொடு பரஞ்சொன்னேன் ரவிசொன்
னேனே (௪௬௪)

ரவியோகமதியோக மொளியிற்யோகம்- நந்தியோகமிதுநா
லுநன்றாய்ச்சொன்னேன், தவியாமற்சடலத்தின்சாய்கைசொன்னே
ன்- சரிதையொடுகிரிகைமெண்டு தள்ளச்சொன்னேன், சிவமானதீ
ட்சையிலேமூலகூட்சஞ்- செப்பினேன் தூலமொடுவட்சரங்கள், அ
வமானகாரியக் குருக்களையுஞ்சொன்னே- னவீட்கர்மஞ்சித்திசொ
ன்னேனகஞ்சொன்னேனே (௪௬௫)

அகமானகூட்சமாந் தேகஞ்சொன்னே- னழியாதமுத்திசொ
ன்னேன் வீடுசேர்க்கச், சுகமாகச்சாயுச்சியகுத்திரஞ்சொன்னேன்-
தோணவேநட்சத்திரராசிசொன்னேன், பகமானவாமத்தின்தேவிபூ
சை- பதமானநாற்பத்துமுக்கோணஞ் சொன்னேன், மகாரமொக்

குங்குண்டலித்தாயோமஞ்சொன்னேன்- மலியாகக்கலியிலிட வளுஞ்சொன்னேனே (௪௯௬)

வளமானதீட்சைவைக்கவிரதமெல்லா-மவுனம்போலொளியாமல்வெளியாச்சொன்னே, னுளமானதிச்சத்திநாமஞ் சொன்னே - னுலாக்கவேநாதவிடைலகிரிசொன்னேன், விளமானகுருவுக்குலட்சணமுஞ்சொன்னேன்- விருதானகோபங்கள்தள்ளச்சொன்னேன், தளமானமுக்குளிகை மூலஞ் சொன்னேன்- சாதனைக்குப்விரதமொடுநாள்சொன்னேனே (௪௯௭)

நாளோபிலக்கினங்கள்பட்சஞ்சொன்னே - கூடவேயனுஷ்டானவிதிகள்சொன்னேன், வாழவேகுருசூட்சமார்க்கஞ்சொன்னேன்- வதனத்திலாதார மாறுஞ்சொன்னேன், வேளானசுயம்பினிலே பிட்சையேற்ற - வேதத்தின்சங்கார வேடஞ்சொன்னேன், பாழானதத்துவங்களறியச் சொன்னேன் - பஞ்சபாதகபாவம் பலஞ்சொன்னேனே (௪௯௮)

பலமானபுண்ணியத்தின்சொற்கஞ்சொன்னேன் -பாழானநரகத்தின்வகையுஞ்சொன்னே, னலமானசிதம்பரத்தின் பூசைசொன்னே - கூடாதசிஷ்னுடகுணமுஞ்சொன்னேன், புலஞகமூலருடபூசைசொன்னேன்- புகழ்பெறவேசாபங்கள் நிவிர்த்திசொன்னே, னஐயாமலப்பியாசமார்க்கஞ்சொன்னே - னப்பனேபாசம்வ[illegible]டகுறைசொன்னேனே (௪௯௯)

விட்டகுறையாலேதான் தேவிதோத்திரம் - விளம்பினேன்பொறிபுலன்கள் கரணம்வாயு, பட்டணமாமண்டலங்களண்டபிண்டம் - பரமபதம்பெறவேண்டிச்சொன்னேனய்யா, நிஷ்டையெல்லாமொன்றானஏகவஸ்து - நெறிமாலினட்சரமெமவுனபீடம், வட்டமதென்[illegible]ரெழுத்தையறியச்சொன்னேன்- மகத்தானரவிவட்டமானவாறே (௫௱)

வாருணசாஸ்திரத்தி லாறுகாண்டம் - வகையாகக்குறுக்கியதில் மூன்றாங்காண்டங், கூறுனகடைக்காண்டமிந்தஞானங்-கொட்டினேனேஞ்ஞூறு சிஷர்க்காக, வீருனநடுக்காண்ட மஞ்ஞூறுசொன்னேன் வேதையிட்டுமுதற்காண்ட மஞ்ஞூறுசொன்னேன், தாருனமூத்தருக்கு மூன்றுகுஸ்திரந் - தப்பாமற்சோடசமுந்தெளிந்துமுற்றே (௫ாக)

## கடைக்காண்டம்-௫ா

முற்றிற்று.



